


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 62 திருவள்ளுவர் ஆண்டு 2056, ஆடவை (ஆனி) – சூலை – 2025



## சமூக நலன் மற்றும் சத்துணவுத் திட்டத் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Balahar feeding programme | – சிறார் உணவூட்டுத் திட்டம் |
| Balwadi | – குழந்தையர் காப்பகம் |
| Personal hygiene | – தன் தூய்மை |
| Child health card | – குழந்தை நல அட்டை |
| Children's working group | – சிறுவர் பணிக் குழு |
| Community nutrition worker | – குமுகாய ஊட்ட உணவுப் பணியாளர் |
| Cooking demonstrtion | – சமையல் செய்முறை விளக்கம் |
| Mother &Child care | – தாய் சேய் நலம்பேணல் |
| District project nutrition | – மாவட்ட ஊட்ட உணவுத் திட்ட அலுவலர் |
| Energy food | – ஆற்றலுணவு |
| Feeding programme | – ஊட்டுத் திட்டம் |
| Food management | – உணவு மேலாண்மை |
| Health check up | – உடல் நல ஆய்வு |
| Monitering cell | – கண்காணிப்புப் பிரிவு |
| Colostrum | – சீம்பால் |
| National children's board | – தேசியக் குழந்தைகள் நலவாரியம். |
| Nutritionist | – ஊட்ட உணவாளர் |
| Nutritional delivery services | – ஊட்ட உணவு வழங்கு பணிகள் |
| Nutrition programme | – ஊட்ட உணவுத் திட்டம் |
| Projector profile | – திட்ட வடிவமைப்பு |
| Deworming | – குடற்புழு நீக்கம் |
| Supplementary food | – துணை உணவு |
| Therapeutic food | – நோயாற்று உணவு |
| Weaning food | – இணை உணவு |
| Weighing bar scale | – எடை அளவுகோல் |

**சொற்குவை (sorkuvai.tn.gov.in) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, ஆடவை (ஆனி)
சூலை – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com


ஐ.எஸ்.பி.என் (ISBN ):978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம்!

தமிழ்ச் சொற்பிறப்பு வரலாற்றை ஆய்ந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'ஓ' என்னும் ஒற்றைச் சொல்லிலிருந்து சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

ஓ = ஒலிக்குறிப்பு

ஓசை = ஓதை

ஓது = ஒலி செய், படி

ஓலம் = ஒலி, முறையீடு

ஒல் = ஒலிக்குறிப்பு

ஒல் – கொல் = ஒலிக்குறிப்பு

ஒல் – ஒலி, ஒல்லென = விரைவாக

ஓ = உயரக் குறிப்பு

ஓங்கு = உயர்

ஓங்கல் = யானை (உயரமான விலங்கு)

ஓக்கம் = உயர்வு

ஓ – ஓம் – ஓம்பு = உயரமாக்கு, வளர், பாதுகா.

ஓம்படை = பாதுகாப்பு

ஓ – ஒ

ஒய்யாரம் = உயரம், உயரம்

ஒயில் = உயர்வு, உயரக் குதித்தடிக்கும் கும்மி

தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து, பாவாணர் எழுதியுள்ள அருஞ்செய்திகளை நாமும் அறிந்துணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# வேர் விளக்கம்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

### சொல் பொருள் தொடர்பு

மொழி அடிப்படையில் ஒலி, பொருள் ஆகியவற்றைக் கொண்டது. ஒலி என்பது ஓர் ஒலியன் அல்லது ஒலியன் தொகுதியான சொல்லைக் குறிக்கும். அவ் வகையில் சொல்லும் அது உணர்த்தும் பொருளும்மொழியமைப்பில்அடிப்படையான தன்மைகளாய் விளங்குகின்றன. அதே நேரத்தில் ஒலியும் பொருளும் சேர்ந்தது மட்டும் மொழி என்று எண்ணிவிடலாகாது. இவை வெளிப்படையாக உணரும் வகையில் அமைந்த மொழிக் கூறுகள். சொல்லப் போனால் மொழி என்பது வெளிப்படையாகத் தெரியும் வகையில் உள்ள இவை அன்று என்றும் இவை இரண்டிற்கும் இடையே நிலவும் தொடர்பாக மொழி விளங்குகிறது என்றும் அதை மறைமுகமாகவே உணரவேண்டியுள்ளது என்றும் குறிப்பிடுகின்றனர் (William G. Moulton 1970:5).

ஒரு குறிப்பிட்ட மொழியைப் பயன்படுத்தும் திறனை மாந்தன் குறிப்பிட்ட பண்பாட்டுச் சூழல் வாயிலாகவே பெறுகிறான். தமிழ்த் திறன் தமிழ்ப் பண்பாடு வாயிலாகவே பெறவேண்டியுள்ளது. ஆகையால் தமிழ்ப் பண்பாட்டுச் சூழல் உரிய வகையில் அமைந்திருக்க வேண்டியது உரிய தமிழ்த் திறன் அளிப்பதற்குக் கட்டாயம். மொழித்திறனைக் கற்றல், கற்பித்தல் ஆகியனவழியே பெறுகிறோம். மொழித்திறன் பிறப்புவழி பெறுவது அன்று.

### சொற்களஞ்சியம்

பெரும்பாலும், மொழியை எளிமையானது எனக் குறிப்பிடுவது அதன் சொற்களஞ்சியத்தின் எண்ணிக்கையைக் கணக்கிற்கொண்டே. ஒரு மொழியைப் பேசுவோர் மெய்யியல், அறிவியல் ஆகியவற்றைப் பேசுபவர்களாக இருந்தால் அவர்கள் பேசும் மொழியில் அதிகப்படியன சொற்கள் இருக்கும். வேட்டை, மீன்பிடித்தல் போன்ற பழைமையான எளிய தொழில்களில் ஈடுபடுவோர் மொழியில் சொற்பெருக்கம் மிகுதியாக இருக்கும் என்று எதிர்பார்க்க இயலாது (மேலது பக்.4). தமிழ் மொழி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பே உயர்தனி செவ்விலக்கியம் அமையும் அளவுக்கு வளமை வாய்ந்தது. இம்மொழி வளர்ந்த பண்பாட்டுச் சூழலில் பேசப்படுவதாக இருந்துள்ளது. அதேநேரத்தில் பலதரப்பட்ட மக்களுக்குத் தொடர்ந்து பேச்சுமொழியாக இருந்துவருகிறது. ஆகையால் இது எல்லா வகையிலும் வளர்ந்த நிலையை எட்டியுள்ளது. இந்நிலையில் அதன் வளர்ச்சியை வளர்ந்துவரும் அறிவியல் கருத்துக்கு ஏற்ப முன்னெடுத்துச் செல்ல வேண்டியது இன்றைய தமிழ் குமுகாயத்தின் தலையாய பணியாக இருக்கிறது.

தமிழ் இயல் சொற்களாக இருக்கும் பலவற்றை அயன்மொழிச் சொற்கள் எனக் கொள்ளும் நிலை இன்றளவும் நிலவி வருகிறது. வடமொழியில் பிரசாதம் இருக்கிறது. ஆனால் அங்குச் சாதம் இல்லை. சாதம் தமிழ்ச்சொல். சோறு – சோது – சாது – ஸாத என்று அதற்கு வேர் காட்டுவார் பாவாணர். பிர – ஒரு சமற்கிருத முன்னொட்டு. திறவுகோல் எனப் பொருள்படும் சாவி என்பதனை மராத்திச் சொல்லாகக் காட்டுகிறது செ.ப.க.த.அ. ஆனால் இதனைச் செவியோடு பொருத்திப் பார்த்து அது தமிழியச் சொல்லாக இருக்கும் நிலையைக் காட்டியுள்ளார் தெலுங்கு அகரமுதலி தொகுத்த பிரௌன் துரைமகனார். திறவுகோலின் மேல்முனை செவி வடிவத்தில் இருப்பதும் தெலுங்கில் இச் சொல் செவி என்றே இருப்பதும் இதனைத் தமிழியச் சொல் எனத் துணிவதற்கு உரிய சான்றுகள்.

### சமற்கிருத ஏற்றம்

"ஆங்கிலத்தில் அனைத்துச் சொற்களுக்கும் இலத்தீன மூலம் காண்பதில் பழைய வேர்ச்சொல் ஆய்வாளர்கள் முயன்றுள்ளனர். கற்றறிந்த தெலுங்கு அறிஞர்கள் தெலுங்குச் சொற்கள் அனைத்திற்கும் சமற்கிருத மூலம் காண்பதில் பெருவிருப்பம் கொண்டிருந்தனர். சொற்கள் உணர்த்தும் பொருளை அடிப்படையாகக் கொள்ளாமல் ஒலி ஒப்புமையை முகாமையாகக் கொண்டே சமற்கிருத மூலம் காண முயன்றுள்ளனர்" (Brown 1985:356). இதே நிலைதான் தமிழிலும்.

### நால்வகை

" இயற்சொல் திரிசொல் திசைச்சொல்

வடசொல்லென்று

அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (தொல்.சொல். 397) என்று வருவதன்மூலம் தொல்காப்பியத்திலேயே வடசொல் தமிழ்ச் செய்யுளுறுப்பாகச் சொல்லப்பட்டதை அறிந்து கொள்ளலாம். இவற்றுள் முதல் மூன்றைத் தன்சொல் அதாவது தமிழ்ச்சொல் என்ற வகைக்குள் அடக்கலாம். இந் நால்வகை சொற்களுள் வடசொல் மட்டும் அயன்மொழிச் சொல். இது தொல்காப்பியர் காலத்துத் தமிழ் மொழியிலுள்ள அனைத்துச் சொற்களையும் உள்ளடக்கிய ஒரு பாகுபாடு. சமற்கிருத மொழியை வடமொழி என்றும் அம் மொழிச் சொல்லை வடசொல் என்றும் சுட்டுவது தமிழ் மரபு. சற்கிருதம் அல்லாத வேறு மொழிகள் வடதிசைக்கண் வழங்கப்பட்டிருந்தாலும் சிறப்புக் கருதி சமற்கிருதத்தை வடமொழி என்று வழங்கி வந்திருக்கிறார்கள். "வடமொழி யொன்றே முற்காலத்தில் தமிழகத்து வழங்கிய அயன்மொழி. அதனால், அதன் சொல் அம் மொழிப்பெயராலேயே வடசொல் லெனப்பட்டது. அதுபோல் இதுபோது தமிழில் வழங்கும் பிறமொழிச் சொற்களும் ஆங்கிலச்சொல்,போர்த்துகீசியச் சொல் என அவ் வம்மொழிப் பெயராலேயே அழைக்கப்படல் வேண்டும்" (பாவாணர் தொல்.சொல். 397 அடிக்குறிப்பு).

### இருவகை

தொல்காப்பியம் தமிழில் வழங்கும் வடசொற்களை இருவகைப் படுத்துகிறது. 1. வட மொழிக்கு உரிய சிறப்பெழுத்து இல்லாமல் தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளுக்கும் பொதுவான எழுத்துகளைக் கொண்டு அமையும் சொற்கள் ஒருவகை. இதனைத் தற்சமம் என்று அழைப்பர். தற்சமம் என்பதற்குத் தனக்குச் சமம் என்பது பொருள். 2. வடமொழிச் சிறப்பெழுத்துகளுடன் அமைந்த வடசொல் தமிழ் ஒலிப்புக் கேற்றவகையில் மாற்றி அமைக்கப்பட்ட சொல். இதனைத் தற்பவம் என்பர். தற்பவம் என்பதற்குத் தன்னிடமிருந்து தோன்றியது அதாவது வடமொழியினின்று திரிந்தது என்பது பொருள். இவ்விரு வகையும் வடமொழி நோக்கில் அமைந்தன. அதாவது, இது வடமொழியை அடிப்படையாகக் கொண்ட பாகுபாடு.

"வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"

(தொல்.சொல்.401)

"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" (தொல்.சொல்.402)

"இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் முதல் நூற்பா தற்சமம் என்ற கருத்திலும் இரண்டாம் நூற்பா தற்பவம் என்ற கருத்திலும் விளக்கியுள்ளார்கள். ஆனால் சேனாவரையர் மட்டுமே அதற்கேற்ற முறையில் எடுத்துக்காட்டுகளைக் கொடுத்துள்ளார்" (சண்முகம் 1984:95). சேனாவரையர் "வடசொல் தற்பவமாக வருவது என்பது பாகதமாய்ச் சிதைந்து வருவனவுங் கொள்க" என்று குறிப்பிட்டுள்ளதன் மூலம் பிராகிருதத்தையும் வடமொழியாகக் கொள்ளும் நிலை இருந்ததை உணர்த்தியுள்ளார். நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும் இக் கருத்தினை ஏற்றுக்கொண்டுள்ளனர்.

பிராகிருதத்தை மரபிலக்கண ஆசிரியர்கள் சமற்கிருத மூலத்தினின்று தோன்றியதாகக் கருதுகின்றனர். வரருசி, ஏமச்சந்திரர், மார்கண்டேயர் போன்ற இலக்கண ஆசிரியர்கள் வெளிப்படையாக அல்லது மறைமுகமாக இக் கருத்தையே வெளிப்படுத்தி இருக்கின்றனர். ஆனால் அருக சமய இலக்கண ஆசிரியர் நமிசாது பிராகிருதத்தைக் கற்றோர் மொழியாகப் பண்பட்ட நிலையிலிருக்கும் மொழிக்கு மாற்றான மக்கள் இயற்கைமொழி என்று வேறுபடுத்திக் காட்டியுள்ளார். இதனைப் பிச்சல் (Pischel) போன்ற இக்கால அறிஞர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். இலக்கண ஆசிரியர் பகுப்புப்படி பிராகிருதச் சொற்கள் 1. தற்சமம், 2. தற்பவம், 3. தேசியம் (சமற்கிருத மூலத்திலிருந்து வளர்ந்த தல்லாதவை) என்னும் மூன்று பிரிவுகளுக்குள் அடங்குகின்றன.

பொதுவாக ஒருமொழி வேறொரு மொழியிலிருந்து சொற்களைக் கடன் கொள்ளும்போது தன் ஒலிப்பு முறைக்கு ஏற்ப மாற்றி அமைப்பது இயல்பு. அவ்வகையில் தற்பவம் என்பது மொழி இயல்புக்கு ஏற்றது. ஆனால் தற்சமம் என்று ஒரு பிரிவினை அடையாளப்படுத்தி யிருப்பது வடமொழியில் உள்ளன வெல்லாம் அம் மொழிச்சொல் எனக் காட்டுவதற்காகும். இதன் அடிப்படையில்தான் எல்லாத் தமிழியக்குடும்ப மொழிகளிலும் உள்ளதும் தமிழிய வேரைத் தெளிவாகக் காட்டி நிற்பதும் குறிப்பிட்ட பொருள்களைக் குறிக்க வேறு தமிழியச் சொற்கள் இல்லாமல் இருப்பதுமான நீர், மீன் போன்ற தமிழ்ச் சொற்களையும் வடமொழியில் ஒருபொருள் பன்மொழிகளாக இருக்கும் முறையே வடமொழி நீர, மீன போன்ற சொற்களினின்று வந்தன எனக் கொண்டதற்கு இடமளித்தது.

## வேர்

"நிலம், காற்று, ஒளி ஆகியன இல்லாமல் மரம் வளர இயலாது. அவை இல்லாமல் வளரும் என்று கருதவும் இயலாது. மொழியும் இவ்வாறுதான். மொழியால் தன்னளவில் இருக்க இயலாது. மொழி வளருவதற்குரிய நிலம் தேவை. மக்கள்தாம் மொழி வளருவதற்குரிய நிலமாக இருக்கின்றனர்" (மாக்சு முல்லர் 1965:2). மக்களால்மொழிவளர்ந்துகொண்டிருக்கிறது. ஒரு மொழியைப் பேசுவோர் இல்லை எனில் அது வழக்கிழந்து அழிந்துவிடும். மொழி சொற்களால் ஆனது. மரத்திற்கு மூலமாக வேர் இருப்பதைப்போல் சொல்லுக்கு மூலமாக இருப்பதை வேர் அல்லது வேர்ச்சொல் என்று குறிப்பிடுகின்றனர். வேர் என்னும் சொல்லிற்குப் பரவுதல் என்னும் பொருளுடைய விர் என்பதை வேர்மூலமாகக் காட்டுவார் கால்டுவெல் (1987:578). பல சொற்களாக விரியும் தன்மை நோக்கி அதற்கு வேர் என்று பெயரிட்டுள்ளனர் என்று குறிப்பிடலாம்.

சொற்களில் வேர்களும் ஒட்டுகளும் இணைந்திருப்பதைப் பரவலாக எல்லா மொழிகளிலும் காணலாம். வேர் அடிப்படையானது. ஒட்டு அதற்கு அடுத்த நிலையில் இரண்டாம் இடத்தில் இருப்பது. ஒரு மொழியில் ஒட்டுகள் சிலவாக இருக்கும். ஒட்டு முன்னொட்டு பின்னொட்டு என இருவகைப்படும். வேருக்கு முன்னதாக இணைவது முன்னொட்டு. வேருக்குப் பின் இணைவது பின்னொட்டு. ஒட்டுகள் நேரடியாக வேருடன் இணைவது உண்டு. வேருடன் வேறு உருபன் சேர்ந்த பின் ஒட்டு இணைவதும் உண்டு. ஒரு வேருடன் ஒட்டு சேரும்போது அந்த வேர் கொள்ளும் உருபனுடன் சேர்ந்த வடிவத்தை அடி (stem) என்று குறிப்பிடுகின்றனர். சில அடிகள் அல்லது சொற்கள் இரண்டு அல்லது அதிகமான வேர்களுடன் காணப்படும். இவ்வாறானவை தொகை (compound) எனப்படும் (Gleason 1974:58,59)

வேர் ஒரு சொல்லின் நடுவத்தன்மையுடன் இருக்கிறது (Bloomfield 1996:10). "வேர்களுள் சில தனியாக இயங்கும் தன்மை கொண்டன. இவற்றை வேர் – சொற்கள் (root – words) என்று அழைப்பர். சில வேர்கள் தனியாக இயங்கும் தன்மை இல்லாதவை. இவற்றைக் கட்டுவேர் (bound root) என்றழைப்பர். இவ்வகை வேர் எப்பொழுதும் ஒட்டுகளுடன் சேர்ந்தே இயங்கும்" (மேலது 240).

## இன்றைய மொழியியலில் வேர்

"காலந்தோறும் தொடர்ந்து இருந்துள்ளதால் வேர் விந்தையான தன்மை

களைக் கொண்டிருக்கும் என நம்பினர். இப்பொழுதும் ஆங்காங்கு நாம் வேர்களாகக் கொள்ளப்பட்டவை, முன்னர் தனிச் சொற்களாகச் செயல்பட்டுள்ளன. என்று சொல்வாரும் உண்டு. இவ்வாறு கொள்வதற்கு முகாந்தரம் ஏதும் இல்லை. வேர்கள் மற்ற கட்டு வடிவங்களை (bound forms) ப்போல் சொற்களிடையே ஒரு பகுதி ஒப்புமை கொண்ட அலகுகள் அன்றி வேறொன்றும் இல்லை. நாம் பகுத்தாயும் மொழியின் முந்தைய நிலையைப் பற்றி நாம் எதுவும் குறிப்பிடவில்லை" (Bloomfield 1996:240 ft.). ஒரு சொல்லில் ஒரு வேர் மட்டும் இருக்கும். ஒரு மொழியின் வேர்கள் மிகப்பல உருபன்களாக இருக்கின்றன. அதற்கேற்ப அவை பல்வேறுபட்டனவாகவும் குறிப்பிட்ட பொருள்களைக் கொண்டனவாகவும் இருக்கின்றன. இதை வேர்கள் தனிச் சொற்களாக இயங்கும் மொழிகளில் தெளிவாக அறிந்து கொள்ளலாம். வேருடன் ஒட்டு சேரும்போது வேர் மாற்றமடைவது உண்டு. பெரும்பாலும் ஒரு மொழியின் வேர்கள் வடிவத்தில் சீரானவையாக இருக்கும். பெரும்பாலான மொழிகளில் வேர்கள் உருபன்களாக இருக்கின்றன (மேலது பக்.242).

இன்றைய மொழியியல் வேர் காண்பதில் சொற்களை ஒரு குறிப்பிட்ட மொழிநிலை வரை கொண்டு சென்று ஆராய்கிறது. மொழிவழக்கில் அதற்கு முந்தைய நிலையும் உண்டு. அதைத் தெளிவாக விளக்கவியலாது எனக் கருதுவதால் ஒரு கட்டத்துடன் நிறுத்தி விடுகின்றனர்.

## வகைப்பாடு

தமிழ் இலக்கணம் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என்று நான்காகப் பிரித்து விளக்குகிறது. இவற்றுள் உரிச்சொல் செய்யுளுக்கேயுரிய சொல். இடைச் சொல்லாவது தனியாக வராமல் பெயருடனும் வினையுடனும் சேர்ந்து வரும் சொல் (இடை– இடம்). இடைச்சொல் ஒரு மொழியில் சிலவாக இருக்கின்றன. ஒரு பொருளின் பெயராக வரும் பெயர்ச்சொல்லும் ஒன்றன் வினையைக் குறிக்கும் வினைச்சொல்லும் மொழிவழக்கில் மிகப்பெரிய இடத்தைப் பிடித்துள்ளன. இவற்றுள் வினைச்சொற்களைக் காட்டிலும் பெயர்ச்சொற்கள் எண்ணிக்கையில் மிகப்பலவாக இருக்கின்றன. பெயரடி, வினையடி ஆகியவை இலக்கண வடிவங்களுடன் பார்ப்பதற்குச் சிக்கல் வாய்ந்தவையாகக் காணப்பட்டாலும் அவை இயல்பாக எளிமையான வகையில் உருவானவை. "சில வினை யடிகள் வினையாகவும் பெயராகவும் வழங்கும் தன்மையில் இருக்கின்றன. இவ்வகை வினையடிகள் எண்ணிக்கையில் மிகப்பலவாக இருக்கின்றன. வினையுடன் தொடர்புப் படுத்திக்காண இயலாத பெயரடிகள் பல இருக்கின்றன (Caldwell 1987:192).

"இலக்கணக் கூறுகளைக் காட்டும் ஈறுகள் எனக் குறிக்கப்படுபவற்றின் மூலங்கள் முன்னர் முழுச்சொற்களாக இருந்துள்ளன. அவை தமக்கென்று தனியான நோக்கத்தையும் பொருளையும் கொண்டிருந்தன" (Max Muller 1965:223). இவ்வகையில் இன்று இடைச்சொற்களாக இருப்பவை முன்னர் முழுச்சொற்களாக இருந்துள்ளன என்பது தெளிவு. என்றாலும் இடைச்சொற்களின் முந்தைய வடிவங்களை எளிதில் காண இயலாது. அவை காலவோட்டத்தில் சுருங்கித் தம் சொற்பொருள்களை இழந்து இலக்கணப் பொருள்களுடன் மொழியில் இருக்கின்றன. தங்கள் முந்தைய ஆற்றலையும் தனியாக இயங்கிய தன்மையையும் வெளிப்படுத்தும் வகையில் அவை இணையும் சொல்லடியின் பொருளை மாற்றமடையச் செய்கின்றன.

## பொருள்

அடிப்படையில் மொழியில் உள்ள அனைத்தும் பொருளுள்ளனவாக இருக்கின்றன. பொருளுணர்த்துவதைவிட வேறு எந்த நோக்கத்தையும் மொழி கொண்டிருக்க வில்லை. தேவையின் அடிப்படையில் தன் நோக்கத்தை நிறைவேற்றுவதைக் காட்டிலும் அதிகமானதை அல்லது குறைவானதை மொழி கொண்டிருக்காது (மேலது 43). இதைத் தொல்காப்பியம் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" (சொல்.155) எனக் குறிப்பிடுகிறது. இதற்குப் "பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய எல்லாச் சொல்லும்

பொருள்குறித்தனவே, பொருள் குறியாது நில்லா" என்று சேனவரையர் உரை வரைந்திருப்பது மொழியிலுள்ள அனைத்தும் பொருளுள்ளன எனக் குறிப்பிடுகிறது. மேலும் தனிமொழி, தொடர்மொழி ஆகிய இரண்டும் பொருளு ணர்த்தும் என்றும் தொடர்மொழி மெய்ப்பொருள் குறிப்பனவும் பொய்ப்பொருள் குறிப்பனவும் என இருவகைப்படும் என்றும் முயற்கோடு, யாமைமயிர்க் கம்பலம் ஆகியவற்றைப் பொய்ப்பொருள் உணர்த்துவதற்கு எடுத்துக்காட்டுகளாகத் தந்தும் அவர் விளக்கியுள்ளார்.

"முயற்கோடு, யாமை மயிர்க்கம்பலம் என்பன பொய்ப்பொருள் – இல்பொருள் குறிப்பன. தனிச்சொற்கள் இல்பொருள் உணர்த்துதல் இல்லை. முயற்கோடு என்ற தொடரிலுள்ள முயல், கோடு என்ற சொற்களைத் தனித்தனி நோக்கிய வழி அவை பொருளுடையனவே. இயைபில்லாத (தகுதியில்லாத) நிலையில் அவ் விரண்டையும் சேர்த்துக் கூறுமிடத்து, அத்தொடர் இல்பொருள் உணர்த்து வதாயிற்று. யாமைமயிர்க்கம்பலம் என்பதனையும் இவ்வாறே கொள்க" (பூவராகம் பிள்ளை).

சொல்லும் அது உணர்த்தும் பொருளும் மொழி அமைப்பில் அடிப்படையானவை. சொல், பொருள் ஆகியன தொடர்பாகக் கவனிக்க வேண்டிய கூறுகள் சில உள்ளன. 1. ஒரு சொல் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டிருக்கலாம். 2. வெவ்வேறு சொற்கள் ஒரு பொருளை உணர்த்துவனவாக இருக்கலாம். 3. சில சொற்களின் பொருள்கள் பகுத்துப் பார்ப்பதற்கு இடம் தருகின்றன. 4. சில சொல் இணைவுகள் அச்சொற்களின் பொருள் சேர்க்கையைக் காட்டிலும் வேறான பொருளைத் தரலாம். 5. சில சொல் இணைவுகள் எதிர்ப்பொருள் தருவனவாக இருக்கலாம். 6. சில பொருள்கள் வேறுபொருள்களுடன் இணைந்து காணப்படு கின்றன (Sydney M. Lamb, 1970:45).

### வடிவம்

மொழி அடிப்படையில் ஒலியைப் பயன்படுத்திப் பொருளை உணர்த்துகிறது. ஆகையால் மொழியை ஒலி, பொருள் ஆகியன கொண்ட செய்தி பரிமாற்றம் செய்யும் அமைப்பு என்று கூறலாம். சொல்லில் வடிவம், பொருள் என்னும் இரண்டு பிரிக்க முடியாத கூறுகள் அடங்கியுள்ளன. இவை இரண்டும் உடம்பும் உயிரும்போல என்றும் இணைந்திருக்கும். இதனைத் தொல்காப்பியம்

"பொருண்மை தெரிதலும் சொன்மை
தெரிதலும்
சொல்லினாகும் என்மனார் புலவர்"

(சொல். 156)

என்று குறிப்பிடுகிறது. இதற்குப் "பெயர், வினை, இடை, உரியாகிய நான்கு சொற்களும் தம்மையும் உணர்த்தித் தம் பொருளையும் உணர்த்துகின்றன என்று கொள்ளுதலே பொருத்தமாகும். சொற்கள் தம்மை உணர்த்தாமற் பொருளை உணர்த்த மாட்டா எனக் கொள்க" (பூவராகம் பிள்ளை) என்று தரும் விளக்கம் சொல் வடிவம் பொருள் ஆகிய இரண்டும் இணைந்த கூட்டாகச் செயல்படுவதை உணர்த்துகிறது. வடிவம் ஒலி, வரி என இருவகைப்படும். மொழி அடிப்படையில் பேசப்படுவதாக இருப்பதால் ஒலி வடிவம் சொல்லின் இயல்பான நிலையாகும். வரி வடிவம் ஒலிவடிவத்தைக் காட்டும் அடையாளம். பேச்சு தாறுமாறாக எழுப்பும் ஒலித்தொகுதி யிலிருந்து வேறானது. உண்மையில் பேச்சில் ஒலித்தொகுதிகள் மொழிநெறிக்கு உட்பட்டு கூட்டிணைவு கொண்டு வரையறைக்கு உட்பட்ட அமைப்பாகச் செயல்படுகின்றன. இதுவே சொல்லின் வெளிப்பாடு அல்லது வடிவம் ஆகும்.

இற்றை மொழியியலாளர் வேர் என்று குறிப்பிடுவதைப் பொருளோடு பொருத்திப் பார்க்க வேண்டும். ஆக இவர்கள் வேர் என்று காட்டும் சொற்களின் பகுதி ஒத்த நிலையில்

பொருள் உண்டு. அதே நேரத்தில் சொற்களின் பகுதி ஒத்த நிலைக்கும் முந்தைய வடிவங்களும் பொருளுடன் தான் இருந்துள்ளன. ஒட்டுகளும் முன்னர் முழுச்சொற்களாக இருந்துள்ளன.

அச்சொற்களின் வேர்களும் முன்னர் பொருளுடன் இருந்துள்ளன. மொழியில் பொருளுணர்த்தாதது எதுவும் இல்லை என்பதை வைத்துப் பார்த்தால் மொழியியலாளர் குறிப்பிடும் வேர் என்பதற்கும் முந்தைய நிலையில் இருப்பவற்குப் பொருள் இருந்துள்ளன என அறியலாம். என்றாலும் வேருக்கு முன் இருந்த வடிவங்களையும் பொருள்களையும் விளக்க வியலாதவர்களாக இருக்கின்றோம் என்று குறிப்பிடுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

சொல்லின் பழங்காலத்து வடிவத்தை வேர் எனக் கொள்வது அனைவருக்கும் ஏற்புடைத்தே. ஆனால் சொல்லின் பழைய தன்மையை எதுவரைக் காட்ட இயலும் என்பதில் தான் கருத்து வேறுபாட்டிற்கு இடம் உண்டு. சொற்களிடையே காணப்படும் பகுதி ஒத்த நிலையை வேர் எனக் கொள்வதில் சிக்கல் எதுவும் இல்லை. அதன் பொருள் தன்மையையும் எளிமையாக விளக்கி விடலாம். இவ்வாறு வேரினை அடையாளப் படுத்துவதால் தான் மொழியில் மிகப்பல வேர்கள் இருக்கின்றன எனக் கொள்ளும் நிலை ஏற்படுகிறது. வேர் என்று குறிப்பிடும் இந்த நிலைக்கும் முந்தைய வடிவங்களைக் காட்டும் வழிவகையை அறிந்துவிட்டால் அப்பொழுது இயல்பாக வேர் எனக்கொள்பவை இவற்றை நோக்கக் குறைவாக இருக்கும். இத்தன்மையை இயன்மொழியாக விளங்கும் தமிழில் காட்ட இயலும் என்பார் பாவாணர். எவ்வாறாயினும் பல்கிப் பெருகியிருக்கும் இன்றைய சொற்களுக்கு மூலமாக விளங்கும் பழங்காலத்துச் சொற்கள் குறைந்த எண்ணிக்கையில் இருந்துள்ளன. அவற்றின் பகுதி ஒத்த நிலையை வேர் எனக்கொள்ளும்போது அப்பொழுது இன்னும் குறைவாகத்தான் வேர்கள் இருந்துள்ளன என்பது தெளிவு.

## முடிவுரை

"வேரின் வளர்ச்சியே அடியும், அடியின் வளர்ச்சியே முதனிலையும் ஆகும் ....பல அடிகட்கு வேரும்,பல முதனிலைகட்கு அடியும் வேரும் மறைந் திருக்கும் அல்லது இறந்துபட்டிருக்கும். வேருக்கு மூலமான முளையும் உண்டு .. முளைக்கு மூலமான விதையும் உண்டு" (பாவாணர் 2000, முன். xxxi) என்று சொற்களிடையே பகுதி ஒத்த நிலை என்பதனைக் கடந்து அதற்கு முந்தைய நிலையையும் காட்ட இயலும் என்பார் பாவாணர். அவர் காட்டும் சொல்லின் முன் வடிவங்களும் பொருள்களோடு பொருந்தியே இருக்கின்றன.

## குறிப்புதவி நூல்கள்


1. தொல்காப்பியம் – சேனாவரையர் உரை

2, பாவாணர், 2000, வேர்ச்சொல் கட்டுரை, தமிழ்மண் பதிப்பகம், சென்னை,

(முதற்பதிப்பு 1944)

3. Bloomfield,L. 1996,Language,Motilal Banarsidass,Delhi (First published 1935)

4. Brown,C.P.,(1985), A Grammar of the Telugu Language, AES, New Delhi (First published 1857)

5. Caldwell,Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages,AES,New Delhi (First published 1856)

6 Gleason,H.A.,1974,An Introduction to Descriptive Linguistics, Oxford & IBH,New Delhi

7. Max Muller,1965, Lectures on the Science of Language, Munshiram Manohar Lal,Delhi(First published 1861)

8. Sydney M. Lamb, 1970, Linguisics Ed. Archibald H. Hill, Higginbothems (P) Ltd. Madras

9. William G. Moulton, 1970, Linguisics Ed. Archibald H. Hill, Higginbothems (P) Ltd. Madras

# தமிழ்மொழி கட்டமைப்பும் சொல்லாக்க விரிவும் (சுருக்கம்)

இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



1.1 தமிழ்த்தாய் வணக்கம்

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்–ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

ஓங்கல்=மலை, ஓங்கி உயர்ந்த மலை, இடைவந்து உயர்ந்தோர் தொழ விளங்கி = அறிவால் மேம்பட்ட பெருமக்களெல்லாம் போற்றியுரைக்கும் படி விளங்கி, ஏங்கொலி நீர் ஞாலம் = எக்காலும் எங்கும் கடல் ஒலி நீர் இரைச்சலுடன் விளங்கும் உலகம், இருளகற்றும்= அத்தகு ஞாலத்தின் இருளைப் போக்கும், ஆங்கவற்றுள் = அங்கே அத்தகு நிலையில், மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது = வயற்காட்டில் உழுகின்ற ஏரில் ஒளி பட்டு மின்னுதற்குக் கரணியமாகிய சூரியன் ஒன்றைத் தவிர, தன்னே ரிலாத தமிழ் = தனக்கு வேறு நிகர் இலாதது தமிழ். தமிழுக்கு நிலவுலகின் இருளை அகற்றும் கதிரவன் ஒன்றைத் தவிர வேறு ஈடு இல்லை.

கதிரவன் உலகின் இருளை அகற்றும் தமிழோ மனத்தின் இருளை அகற்றும்.

"எழுத்தறிய தீரும் இழிதகமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்
–மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல்நூல்
பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

என்பது மற்றொரு பழம் பாடல். தமிழறிவு, தமிழ்ப்புலமை, தமிழின் ஆழ்மை தமிழ்மையாக்குவதாகவே இருக்கும். அன்பு, அருள், நற்பண்பு, கனிவு முதலானவற்றைத் தருவது தமிழே.

1.2 தமிழின் இயன்மொழிக்குரிய தன்மை

தொன்மை = பழமை
இயன்மை= இயல்பு தன்மை
தூய்மை= கலப்பற்றது
தாய்மை= அனைத்து மொழிகளுக்கும் தாயானது
முன்மை= அனைத்து மொழிகளுக்கும் முந்தி தோன்றியது
வியன்மை = வியந்து நோக்கக்கூடிய காட்டமைப்பைக்
கொண்டது
வளமை= சொல் வளம், இலக்கிய வளம் நிறைந்தது
மறைமை= ஆழமானக் கருத்துகளைத் தன்னகத்தே
உள்ளடக்கியது
ஒண்மை= அறிவாற்றலைத் தர வல்லது
இறைமை = மீமிசைத் தன்மையைத் தரவல்லது, ஆளுமை
மிக்கது
அம்மை= அழகார்ந்தது.
செம்மை= சிதைவற்ற, ஒழுங்கமைப்பைக் கொண்டசெந்தண்மையானது

2.00 உலகத் தோற்றமும் மாந்தப் பிறப்பிடமும்

இவ்வுலகம் தீப்பிழம்பாய்க் கிடக்கும் கதிரவனிடமிருந்து ஏறக்குறைய 450 கோடி ஆண்டுகளுக்கு முன்னால் வெடித்துச் சிதறி வெளியேறியது என ஓர் அறிவியல் கருதுகோள் பொதுவாக உள்ளது. கதிரவனிடமிருந்து தனித்துச்

சென்று படிப்படியாகக் குளிரடைந்தது. ஈர்ப்பு விசையின் கரணியமாகத் தொடர்ந்து சூரியனை உலகம் சுற்றி வருகின்றது. உலகம் என்றாலே உருண்டையானது என்றும் சுற்றுவது என்றும்தான் பொருள்.

உல்>உலம்> உலகு உலகம்.

உல்> உலா

எ.டு.: சுற்றுலா

உலவுந்தென்றல்........

உலகத்திற்கு ஞாலம், பார், தரணி, நிலம் முதலான வேறு பெயர்களும் உள்ளன. உலகம் குளிரடைந்து படிப்படியாக உயிரினங்கள் இயற்கை மூலங்களின் கூட்டுகளினால் தோன்றலாயின. சிலர் எரிகற்களின் வீழ்ச்சியினாலும் உயிரினங்கள் தோன்றின என்பர்.

உலகத்தின் நடுவிடமாகக் கருதக் கூடிய ஆப்பிரிக்கா, இந்தியா, இந்தோனேசியா பகுதிகள் இணைந்த பகுதிகளே மாந்தப் பிறப்பிடமாக இருக்கக் கூடும் என்பதும் வரலாற்றாசிரியர்களின் கருத்தாக உள்ளது.

இந்த நிலப் பகுதிகளையே குமரிப் பெரு நிலம் என்று தமிழிலும் இலெமூரியா பெரு நிலம் என ஆங்கிலத்திலும் பெயர் வைத்தனர். லெமூரியா என பெயர் கண்டவர் கில்பருட்டு சிலேட்டர் ஆவார். இப்பகுதியில் வாழும் இலெமூர் எனும் சிறிய வகை குரங்கை வைத்து இப்பெயரை அவர் சூட்டினார்.

இந்தப் பெரு நிலப் பகுதியிலிருந்தே முதல்மாந்தன் தோற்றமும் அம்முதல் மாந்தன் வழியாக முதற்றாய் மொழியும் தோற்றமும் பெற்றன என்பது பாவாணர் கருத்து. அம்முதற்றாய் மொழி தமிழ் என்றே பாவாணர் ஆணித்தரமாக நிறுவினார். தமிழ் மொழியின் முதன்மையையும் தாய்மையையும் நிறுவுதற்கு இந்த மொழி நூல் அறிவு இன்றியமையாதது மொழி நூலின் வாயிலாகவே நாம் வேர்ச்சொல் அறிவையும் பெற முடியும். வேர்ச்சொல் அறிவே நமக்குச் சொற்களின் உண்மைப் பொருளையும் நுண்மைப் பொருளையும் தெளிவுறக் காணத் துணை செய்யும்.

அவ்வகையில் தமிழில் சொல் விளக்கக் கருத்துகளை நாம் முதன்முதலாகக் தொல்காப்பியத்தில்தான் காண்கிறோம்.

"மாற்ற அருஞ் சிறப்பின் மரபு இயல் கிளப்பின் பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று ஒன்பதும் குழவியொடு இளமைப் பெயரே"

பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி ஆகியனவற்றை இளமைப் பெயர் என்கிறது தொல்காப்பியம். தொல்காப்பிய மரபியலில் மேலும் பல சொற்களைக் காணலாம்.

### 3.0 மொழிநூல் என்றால் என்ன?

மொழிநூல் என்பதை ஆங்கிலத்தில் philology என்பார்கள். Philology > (Gr. philos, desire; logos, discourse). மார்க்சு முல்லர் எனும் செர்மானிய மொழியியலாளர் தான் முதன்முதலாக மொழியியலுக்கு மொழி அறிவியல் (science of language) எனப் பெயரிட்டார். மொழி மாந்த மனத்தோடும் அறிவோடும் இயைந்ததாகையால் மொழி அறிவியல் எனப் பெயரிட்டது சாலப்பொருத்தமே. Philology எனின் விரும்பிக் கற்கப்படுவது எனப் பொருளாகும். Phil எனும் சொல்லுக்குரிய தமிழ்ச்சொல் விருப்பம் ஆகும். இதன் தமிழ் வேர் விள் என்பதே. விள் என்பதற்கும் phil என்பதற்கும் ஒலி ஒற்றுமையும் பொருள் ஒற்றுமையும் இருப்பது மேலோட்டமாகப் பார்த்தாலே தெரிய வரும். இவ்வாறு விரும்பிக் கற்பதின் வாயிலாக மொழியியலாக விளங்கும் மொழிநூலை நாம் ஆழ்ந்து அறிய முடியும்.

எனவே, மொழியைப் பற்றிய அடிப்படை நுட்பங்களையும் கட்டமைப்பையும் வரலாற்றையும் நுணுகி விளக்குவதே மொழி நூலாகும்.

தமிழில் மொழி நூல் எனும் சொல்லை முதன் முதலாகக் கண்டறிந்து வெளிப்படுத்தியவர் மாகறல் கார்த்திகேயனார் ஆவார். 1913 இல் முதன்முதலாகத் தமிழில் மொழிநூல் எனும் தலைப்பில் அரிய நூலினை மாகறல் கார்த்திகேயனார் படைத்தார். அவருக்குப் பிறகு தமிழ் மொழி நூல் எனும் தலைப்பில் 1936 இல் சுப்பிரமணிய சாத்திரியார் என்பார் மொழி நூலைப் பற்றி நூல் எழுதி வெளியிட்டார்.

பின்னர் தமிழறிஞர் கா.சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் 1939 இல் வெளியிட்ட நூலே மொழி நூற் கொள்கையும் தமிழ் மொழி அமைப்பும் என்பதாகும். மொழி நூலியலில் வேர்ச்சொல்லியலே சொல்லின் மரபணுவைக் காணக் கூடியது. இத்துறையில் சிறப்புக்குரிய மற்றொருவர் ஞானப்பரகாச அடிகளார் ஆவார். அவரே முதன்முதலாகத் தமிழில் சொற்பிறப்பு ஒப்பியல் (An Etymological and comparative LEXICON of Tamil Language) எனும் நூலை வெளியிட்டார். இவ்வரிசையில் மறைமலை அடிகளார் தனித்தமிழ் இயக்கத் தோற்றுநராகவும் அதன் பரப்புரை யாளராகவும் விளங்கியவர் என்பது குறிப்பிடத் தக்கது. இவ்வேர்ச்சொல் ஆராய்ச்சித் துறையில் தம்மை முற்றும் முழுதாக ஆழ்த்தி அதனையே தம் வாழ் நாள் பணியாக எண்ணி அத்துறையில் பெரும்புரட்சியை ஏற்படுத்தியவர் ஞா.தேவநேயப் பாவாணர் ஆவார். இக்கால் பாவாணர் வழி இத்துறையில் தொடர்ந்து பல்வேறு ஆய்வுகளை நிகழ்த்திக் கொண்டிருப்பவர்கள் சொல்லாய்வறிஞர் தமிழூர் ப.அருளி அவர்களும் சொல்லாய்வறிஞர் கு. அரசேந்திரனார், பேரா. இரா.மதிவாணன், செந்தமிழ் அந்தணர் முதுமுனைவர் இளங்குமரனார் முதலானோரைக் குறிப்பிடலாம். மலேசியத் திருநாட்டில் அறிஞர் பெருமகன் இர.திருச்செல்வம் அவர்களும் இத்துறையில் முனைப்பு காட்டுகின்றனர். சொல்லாராய்ச்சித் துறை ஆய்வு தனித்த ஆர்வத்துடனும் மிகுந்த ஈடுபாட்டுடனும் கூரிய அறிவுடனும் ஆழ்ந்த பற்றுடனும் காய்தல் உவத்தல் இன்றியும் ஈகத்துடனும் செய்ய வேண்டிய முயற்சி... இதில் நுனிப்புல் மேய்தல் கூடாது. உண்மைத் தன்மையை இறுதி வரை ஏரணவியல் நோக்குடன் அறிய முற்படல் வேண்டும்

### 4.0 மொழியியல் உலகம் குறிப்பிட வேண்டிய பாவாணரின் சுட்டடிக் கோட்பாடு

#### அ.இ.உ....

தமிழ் மொழியின் பன்னூற்றுக்கணக்கான சொல்லாக்கங்களுக்கு மூல வித்தாக வேராக இருப்பன சுட்டிகளே. அவற்றில் ஊகாரச் சுட்டே பெரும்பான்மையது. மொழிகளின் இருப்பு சொற்களின் காப்பிலேயே உள்ளது. சொல் வளம் குன்றும் மொழி அழிவு நிலையை நோக்கிச் செல்லும் எனவே தமிழர்கள் தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்துவதின் வாயிலாகத் தமிழைக் காக்க முடியும், உலகம் எனும் சொல்லில் உலகம் உருண்டை என்பதையும் உலகம் உருள்வது என்பதையும் பொதித்து வைத்தவர் தமிழர்.

மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களே வேர்ச்சொல் ஆய்வுக்குரிய அடிப்படை கோட்பாடுகளை உருவாக்கி பன்னூற்றுக்கணக்கான தமிழ்ச்சொற்களுக்கு வேர்ப்பொருள் கருத்து வளர்ச்சி வகைப்பாட்டினைக் கண்டவர்.

உ=வித்து

உல்=ஆணி வேர்

சுல் =பக்க வேர்

சூரியன் எனும் சொல்லின் மூல வித்து ஊகாரமே.

உ>உல்>சுல்>சுலீர்>சுரீர் என குத்தும் பொருளில் சொல் விரியும்

தமிழ்ச்சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனத்

தொல்காப்பியர் காட்டுவார். திசைச்சொற்கள் தமிழ் மண்ணிலேயே வழங்கிய வட்டாரச் சொற்களையே உணர்த்துவன.

தாய், தள்ளை, சோறு, சொன்றி எனச் சொல்லப்படுவனவே திசைச்சொற்களாகும் பிற்காலத்தில் திசைச்சொற்களுள் அயற்சொற்களை இணைத்தது தமிழுக்குச் செய்த கேடாகும்.

தேவநேயப் பாவாணர் எனும் பேரறிவர் கண்ட ஆய்வுமுறை எண்ணி எண்ணி வியக்கத் தக்கது. தமிழ்ச்சொற்களின் பிறப்பாக்கத்தை உயிர் தோற்ற பிறப்பாக்கத்தின் அடிப்படையிலேயே அவர் ஆய்ந்திருக்கின்றார். அறிவியலாளர்கள் உயிரிகளை இருவகை நுண்ணுயிரிகளாவே பகுப்பர். இந்த ஒற்றைச் சில்லிகளை (செல்) நிலைச்சில்லி (protophyte) என்றும் நகர்ச்சில்லி (Portozoa) என்றும் பகுப்பர். ஒன்று நிலையாக ஒரே இடத்தில் இருப்பது மற்றொன்று நகர்வது. இரண்டுக்கும் அசைவு உண்டு, ஆனால் ஒன்றின் அசைவு அதனிடத்திலும் அதற்குள்ளாகவும் நடக்கும். மற்றொன்றின் நகர்வோ ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குச் செல்லும்

இத்தகு உயிரியக்க நுண்மையைப் போன்றே சொல் பிறப்பும் தோற்றமும் முற்படலும் முற்செலவும் அமைந்துள்ளதை நுணுகிப் பார்த்து வெளிப்படுத்திய பாவணரின் பேரறிவைப் பார்த்து நான் வியக்கின்றேன். பாவாணர் சொல்லியக்கத்தையும் இருவகையாகவே சொல்வார். ஒன்று தம்மிடத்தே நிகழும் நகர்ச்சி மற்றொன்று இடம் விட்டு இடம் செல்லும் நகர்ச்சி.

தனக்குள் நிகழும் நகர்ச்சியில் கருக்கொள்ளும், தோன்றும், முற்படும், இடம்பெயராமல் உயரும்... இடம் பெயரும் நகர்ச்சியில் தோன்றி முற்பட்டு முன்னுறும் முன்செலும் முன்சென்றது உந்தி முந்தி மற்றொன்றினிடத்து நெருங்கும் நெருங்கியது பின்னர் அதனைத் தொடும் தொட்டது அதனோடு சேரும் இல்லையெனில் அப்பொருள் மெல்லிதாயின் அதனைத் துளைக்கும் துருவும் அப்பொருள் வல்லிதாயின் துளைக்க முடியாமல் வளையும்

இத்தகு வினையியக்கமே சொற்களின் கருத்து வளர்ச்சி இயக்கமென பாவாணர் ஆய்ந்துள்ளார் கண்டு பிடித்துள்ளார். தமிழ்ச்சொற்களின் வகைப்பாடுகளை ஆய்கின்ற வேளை அவ்வண்ணமே அமைந்துள்ளன. இதற்குச் சுட்டடிச் சொற்கட்டமைப்பும் மூலமுமே வித்தாக அமைந்துள்ளதைப் பாவாணர் ஏரணவியலாய் விளக்கியுள்ளார். இது பெறற்கரிய மொழிநூலியல் கோட்பாடு இந்தக் கோட்பாட்டை மிகச் செப்பமாகக் கண்டறிந்து ஆராய்து நெறிப்பாடுகளை வெளிப்படுத்தியவர் பாவாணரே..

பாவாணரின் கண்டுபிடிப்பு உலக மொழியியலாளர்களால் குறிப்பிடப்பட கவனிக்கப்பட வேண்டிய மொழியியல் கோட்பாடாகும்... அதுவே சுட்டடிக் கோட்பாடு. தேவநேயக் கோட்பாடு.

பாவாணரைப் பயில்வார் காந்தத்துடன் உரசிய இரும்புத் துண்டும் காந்தத் தன்மையைப் பெறுவது போல தாமும் அத்தகு ஆற்றலைப் பெறுவார். தமிழ் கூறும் நல்லுலகில் தமிழைக் காக்க விழைவாரும் ஆய்வாரும் தமிழில் ஆக்கங்கள் பல செய்ய முனைவாரும் பாவாணரைக் கட்டாயம் நுணுகி ஆய்தலும் அறிதலும் உணர்தலும் வேண்டும்.

தமிழ் அயரத் தாழ்ந்தான் தமிழன்! – அவனே
தமிழ் உயரத் தானுயர்வான் தான்...
– பாவாணர்

# தாழிமரம் அறிவோமா?



இலக்குவனார் திருவள்ளுவன்

தலைவர் – தமிழ்க் காப்புக்கழகம்



தொட்டிகளில் வளர்க்கும் குறுமர வகைகளை நாம் போன்சாய் என்கிறோம். போன்சாய் என்பது சப்பானியச் சொல். போன் என்பது சிறு பானையைக் குறிக்கும்; சாய் என்பது செடியைக் குறிக்கும். சீன மொழியில் பென்(ஞ்)சாய் எனப்படுகிறது.

சிறு தொட்டிகளில் வளர்க்கும் செடி வகைகளைச் சீனர்கள் 6 ஆம் நூற்றாண்டில் வளர்த்து வந்திருக்கலாம் எனப் படங்கள் மூலம் அறிய வருகிறோம். எனினும் சப்பானில் 11 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே போன்சாய் அறிமுகமாகியுள்ளது. 19 ஆம் நூற்றாண்டில் இம்முறை உலகெங்கும் பரவியது.

ஆங்கிலத்தில் சிறுவகை மரங்களை (miniature) இவ்வாறு வளர்ப்பதையும் போன்சாய் என்றே குறிப்பிடுகின்றனர். என்ற போதிலும் நாவலந்தீவு என்று அழைக்கப் பெற்ற இன்றைய இந்தியாவில் இமயமலைப் பகுதியில் மருத்துவர்கள் மருந்துச் செடியைச் சிறு பானைகளில் வளர்த்து வந்த முறையே சீனாவிற்குப் பரவியது என்றும் சொல்லுவர்.

நம் நிலப்பகுதி முழுவதும் தமிழ்நாடாக இருந்த பொழுது இம்முறை தோன்றியிருக்கலாம்.

தாழிமுதல் கலித்த கோழிலைப் பருத்தி

(அகநானூறு 129.7 ) எனத் தாழியில் வளர்ந்துள்ள கொழுவியஇலையையுடைய பருத்தியைப் பற்றிக் குடவாயில் கீரத்தனார் என்னும் புலவர் கூறுகிறார்.

தலைவியைக் காணாமல் தாழியில் வளர்த்த குவளைச் செடியின் மலர் வாடியது குறித்துத்

தாழிக்குவளை வாடுமலர்

என அகநானூறு (165.11) கூறுகிறது.

கொடிவகைகளை உயரமான தாழியில் வளர்த்துள்ளனர் என்பதனை,

ஓங்கும்நிலைத் தாழி மல்கச் சார்த்தி
குடைஅடை நீரின் மடையினள் எடுத்த
பந்தர் வயலை பந்துஎறிந்து ஆடி

எனப் புலவர் கயமனார் கூறுவதில் இருந்து (அகநானூறு 275:1–3) அறியலாம்.

உயர்ந்த தாழியில் நிறைய வைத்துப் பனங்குடையால் நீரை மொண்டு ஊற்றி வளர்த்த வயலைக்கொடி படர்ந்த பந்தலின் கீழே பந்தை எறிந்து ஆடுவது குறித்து இதில் கூறப்பட்டுள்ளது.

நீர்வளம் இல்லாத பாலை நிலைத்தில் இவ்வாறு தாழியில் மண் இட்டு நீர் வார்த்துச் செடியை வளர்த்துள்ளனர்.

தோட்டவியலில் சிறந்திருந்த தமிழர் பானை அல்லது தாழியில் செடி வளர்க்கும் முறையை உலகிற்கு அறிமுகப்படுத்தினர் எனலாம்.

# மருந்து!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"உன்னை அறிந்தால் நீ
உன்னை அறிந்தால்
உலகத்தில் போராடலாம்
உயர்ந்தாலும் தாழ்ந்தாலும்
தலைவணங்காமல் நீ வாழலாம்...
மானம் பெரியதென்று
வாழும் மனிதர்களை
மானென்று சொல்வதில்லையா – தன்னைத்
தானும் அறிந்து கொண்டு
ஊருக்கும் சொல்பவர்கள்
தலைவர்கள்ஆவதில்லையா"
(கண்ணதாசன், வேட்டைக்காரன்).

*****

ஒருநாள் புலவர் ஒருவர், அவருக்கு அதிகம் அறிமுகமில்லாத, புரவலர் ஒருவரின் வீட்டுக்குச் சென்றார். பேச்சுக்குரல் கேட்டுப் புரவலரின் மனைவி அடுக்களையிலிருந்து குரல் கொடுத்தார்: 'ஒன்பது வந்திருக்கிறதா?' இதைக் கேட்டு அதிர்ச்சியும் வியப்பும் அடைந்த புலவர், 'இல்லை இல்லை, தொண்ணூற்றைந்து தான் " என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாராம்!

* திருக்குறளில் ஒன்பதாவது அதிகாரம் விருந்தோம்பல்! விருந்து வந்திருக்கிறதா, (கூடுதல் சமையல் செய்ய வேண்டுமா) எனக் கேட்டார் புரவலர் மனைவி.

* தொண்ணூற்றைந்தாவது அதிகாரம் மருந்து! புலவர் தாம் மருந்து உண்பதாக (வெளியில் எங்கும் உண்ணக்கூடாது என்னும் பற்றியம் – பத்தியம் இருப்பதாக) கூறித் தம் வீட்டுக்கு உண்ணப் போய்விட்டார்.

மா – மாத்திரை = கால அளவு. குறில் ஒரு மாத்திரை, நெடில் இரண்டு மாத்திரை ...

"கண் இமை நொடிஎன அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே".
(தொல்காப்பியம், நூன்மரபு: 7).

"இயல்பெழு மாந்தர்தம் இமைநொடி
மாத்திரை"
(நன்னூல்).

மாத்திரை = metre, meter
Kilometer = அயிரமாத்திரை
Thermometer = வெப்பமானி / தெறுமமானி.
Lactometer = பால்மானி ...

"அவனை,
நாண் அட, பெயர்த்தல் நமக்கும் ஆங்கு
ஒல்லாது;
"பேணினர்" எனப்படுதல் பெண்மையும்
அன்று; அவன்
வௌவினன் முயங்கும் மாத்திரம் வா'எனக்
கூறுவென் போலக் காட்டி,
மற்றுஅவன் மேஎவழி மேவாய், நெஞ்சே!"
(கலித்தொகை: 47).

மா – மாத்திரம் = அளவு, கால அளவு.
முயங்கும் மாத்திரம் = முயங்கும் அளவில்.
கேட்ட அளவில் என்பதைக் 'கேட்ட மாத்திரத்தில்' என்பது பேச்சுவழக்கு.

மா – மானம்,
"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்"
(திருக்குறள்: 969).

விளக்கம்: மானம் என்பது மதிப்பு என்ற சொல்லோடு தொடர்புபடுத்தப்படுவது. மானம், உயிர் இவற்றில் ஒன்றுதான் தங்கும் என்னும் நிலை வந்தால் உயிரை ஈடாகக் கொடுத்து மானம் காப்பர் நற்பண்பு ஓம்பும் உணர்வுள்ள மாந்தர். உயிரா? மானமா? என்ற நிலை வரும்போது வாழ்வைத் துறப்பது சிறந்தது என்பது வள்ளுவக் கோட்பாடு.

மா – மானம் – எண்மானம் = எண்ணின் மதிப்பு, அளவு.
மா= அளவு; மதி = அளவு, பெறுமதி.
ஏற்றுமதி, இறக்குமதி.

"பெண்விழைந்து பின்செலினும்,
தன்செலவில் குன்றாமை;
கண்விழைந்து கையுறினும், காதல்
பொருட்கு இன்மை;
மண்விழைந்து வாழ்நாள் மதியாமை; –
இம்மூன்றும்
நுண்விழைந்த நூலவர் நோக்கு."
(திரிகடுகம்: 29).

பொருள்: பெண் ஆசையோடு பெண்ணின் பின்னே சென்றாலும் தன் நன்னடத்தையில் குன்றாமை!
கண்ணுக்கு அழகான பொருள் தன் கையில் கிடைத்தாலும் அதனைத் தானே பெற்றிருக்க வேண்டும் என்று விரும்பாமை!
வாழ்நாளை மதிக்காமல் – உயர்வாக அளவிடாமல் – பிறர் மண்ணைத் தான் அடைய விரும்பாமை! – இவை மூன்றும் நூலறிந்த கல்வியாளர் ஆசைப்படும் நுண்ணோக்கு.

மா – மதி – மதித்தல் – மதிப்பு – மதிப்பிடு – மதிப்பீடு – மதிப்பெண் = அளவிடல்!
மா – (மாத்தல்) – மானம் – வருமானம், பெறுமானம்,
(மா – மானியம் = அளவிட்ட சலுகை).

"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்"
(திருக்குறள்: 217).

பரிமேலழகர் உரை: செல்வம் ஒப்புரவு செய்யும் பெரிய தகைமையுடையான் கண்ணே படுமாயின், அஃது எல்லா உறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் தப்பாத மரத்தை ஒக்கும்.
(தப்புதலாவது, கோடற்கு அரிய இடங்களில் நின்றாதல், மறைந்து நின்றாதால், காலத்தான் வேறுபட்டாதல், பயன்படாமை. தன் குறை நோக்காது எல்லார் வருத்தமும் தீர்க்கும் என்பதாம். இவை மூன்று பாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது.)

"மரம் சா மருந்தும் கொள்ளார், மாந்தர்"
என்பது நற்றிணை(226).
மரங்களே மருந்து! ஆயினும், மரம் சாகும்படி பட்டையைக் கூட உரித்து முழுமையாகப் பயன்கொள்ளமாட்டார் பண்டைத் தமிழர்!

மரம் > மருந்து,
"காணவே மலைதோறும் சர்க்கரைவேம்புண்டு
காய்தின்றால் கற்கண்டு போலே தோன்றும்
பூணவே இலைதின்றால் மண்டலத்தில் சித்தி
புகழான காய்தின்றால் பட்சத்தில் சித்தி
தோணவே பூத்தின்றால் வாதத்தில் சித்தி
தொகுத்ததொகை சித்தருக்கு இதுவே யாகும்
ஆணவே கீழ்வழி பார்க்கும் அப்பா ஆச்சரியம்
இதுதேடி அறிந்து கொள்ளே!,

கொள்ளவே சிவப்பான கற்றாழை தானும்
கொண்டுவர மண்டலம்தான் அந்தி சந்தி
உள்ளவே தேகமது கஸ்தூரி வீசும்
வேர்வைதான் தேகத்தில் கசியா
தப்பா!துள்ளவே நரைதிரைகள் எல்லாம்
மாறும் சோம்பல்என்ற நித்திரையும்
கொட்டாவி இல்லை
கள்ளவே காமம் இது உடலில் ஊறும்
கண்களுமே செவ்வரளிப் பூப்போ லாமே!"
(போகர் 7000: 642, 643).

மரம் என்னும் சொல்லே மருந்தாகி நிற்கிறது.
இச் சிறப்பைக் குறிக்கவே அருமருந்து, மாமருந்து, அரும(ரு)ந்த(ன்ன) பிள்ளை என்னும் வழக்காறுகள்!

பதினெண்கீழ்க் கணக்கிலும் ஏலாதி, திரிகடுகம், சிறுபஞ்ச மூலம் என நூலின் பெயர்கள்!
திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி

என்னும் மூன்று மருந்துப் பொருட்களைக் குறிக்கும்.

ஏலத்தை முதலாகக் கொண்ட இலவங்கம், சிறு நாவற் பூ, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய ஆறு பொருட்களைப் பயன்படுத்திச் செய்யப்பட்ட ஏலாதி என்னும் மருந்து ஒன்றின் பெயரை அடியொற்றி ஏற்பட்டது ஏலாதி எனும் நூல்.
கண்டங்கத்தரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சில் ஆகிய ஐந்தின் வேர்களைச் சேர்த்து மருந்தாக்குவது போல, ஐந்து உறுதிப்பொருள்களைக் கூறுவது சிறுபஞ்சமூலம்!
மரம் செடி கொடிகளை உயர்வாகக் கருதிய தமிழர் அவற்றைக் கொண்டே ஐந்து நிலங்களுக்கும் பெயர் சூட்டியுள்ளனர்!

குல் = வளை, உருள், உருண்டை.
குல் – கோல் – கோலு – குள் – கோள் – கோளம்; குள் – குளிகை = மாத்திரை.
நுங்குறை = நுங்கு உறை = capsule,
(டியூப் மாத்திரை!) – கோலி(இ) – गोली.

திரை – பெயர் ஈறு.
யா + திரை = யாத்திரை போல,
மா + திரை = மாத்திரை > med > medicine ....

"சுர் – சுரி = எரி, நீறாக்கு, சூட்டால் சுருங்கு அல்லது வளை.
சுரி + அணம் = சுரணம் – சுண்ணம் = நீறு.
சுண்ணம் – சுண்ணாம்பு.
சுரணம் – சூரணம்."

(பாவாணர்).

மருந்து வகைகள்:
சூரணம் = சுண்ணம் = பொடி.
செம் – செந்தூரம்.
நீறு (சாம்பல்) – பஸ்பம்.
கருக்கு, கருக்குதல் – கஷாயம் – (கழாயம்) – கியாழம் (metathesis = எழுத்து இடமாற்றம்).
இளகியம் – இளேகியம் – லேகியம்.

மா, மதி = அளவு,
மா – மாத்திரை > medicine!
medicine (n.)
c. 1200, "medical treatment, cure, healing," also (early 14c.) "substance used in treatment of a disease, medicinal potion or plaster," also used figuratively of spiritual remedies, from Old French medecine (Modern French medicine) "medicine, art of healing, cure, treatment, potion" and directly from Latin medicina "the healing art, medicine; a remedy," also used figuratively.

This is perhaps originally ars medicina "the medical art," from fem. of medicinus (adj.) "of a doctor," from medicus "a physician" (from PIE root *med– "take appropriate measures"); though OED says evidence for this path is wanting and suggests derivation directly from medicus. The sense of "practice, theory, or study of curing, alleviating, or preventing disease in humans" is from mid–14c.

*med–
Proto–Indo–European root meaning "take appropriate measures."
It forms all or part of: accommodate; accommodation; commode; commodious; commodity; empty; immoderate; immodest; Medea; medical; medicament; medicaster; medicate; medication; medicine; medico; medico–; meditate; meditation; Medusa; meet (adj.) "proper, fitting;" mete (v.) "to allot;" modal; mode; model; moderate; modern; modest; modicum; modify; modular; modulate; module; modulation; mold (n.1) "hollow shape;" mood (n.2) "grammatical form indicating the function of a verb;" must (v.); premeditate; premeditation; remedial; remediation; remedy.



# திருக்குறளில் ‘ பிணி ’ பொருட்பன்மை உளவியல்

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

விளம்புகின்ற அறத்தால் சிறப்புறுவது போலவே மொழியமைப்பு / நடைச் சிறப்பு ஆகியவற்றாலும் திருக்குறள் மிளிர்கின்றது. பழந்தமிழ்ச் சொற்களைச் செவ்வனே ஆண்டும் புதுக்கியும் வள்ளுவம் வழங்குகின்றது. இம் முறையில் பிணி என்னும் பல்பொருட்சொல்லைப் பெயராகவும் வினையாகவும் திருக்குறள் ஆளுமாற்றை எடுத்துரைப்பதாக இக் குறிப்புரை இயல்கின்றது.

மனித வாழ்க்கையில் உடல்நலம் முதன்மையாகி, மானுட இயக்கத்திற்கும் அடிப்படையாகின்றது. இதில் நலிவு ஏற்படும்போது பிணி / நோய் உண்டாகின்றது. இதோடு உள்ளத்தில் பிணி ஏற்படுவதும் உண்டு. வள்ளுவத்தில் கீழ்வருமாறு பிணி பெயராகப் பயில்கின்றது:

| குறட்பா எண் | பொருள் |
|---|---|
| 227 | பசியால் உண்டாகின்ற நலிவு |
| 734 | தொற்று நோய் |
| 738 | தொற்று நோய் |
| 949 | தொற்று நோய் |
| 1014 | எண்ண மாறுபாடு |
| 1102 | தொற்று நோய் |

மேற்படி அட்டவணையால் தொற்று நோய் என்னும் பொதுப் பொருளோடு பசியையும் வெறுப்பையும் எரிச்சலையும் வள்ளுவம் பிணியாகச் சுட்டுவது அறியலாகின்றது. 1014ஆம் குறட்பா (psychosomatic illnesses– மனஞ் சார்ந்த நோய்) என்னும் நோயியல் கருத்தில் இயல்கின்றது. பிணியைக் குறிக்க நோய் என்னும் பெயர்ச்சொல்லையும் வள்ளுவம் ஆண்டுள்ளது.

அடுத்து , வினையாக இணைத்தல் என்னும் பொருளில்,

கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை (570)

என்னும் குறட்பாவில் பிணித்தல் என்பதன் வினைடியாகத் தோன்றிய பெயரெச்சமாக நட்பாடல் / சேர்த்தல் என்றும்,

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல் (643)

என்னும் குறளில் அவ்வாறே உடன்படுத்துதல் / தன்வயமாக்கல் என்னும் கருத்திலும் திருவள்ளுவர் இதை நுட்பமாக ஆண்டுள்ளார்.

இங்ஙனம் பெயராகவும் பெயரெச்சமாகவும் இயல்கின்ற பிணியை உணர்ந்து தெளிந்தால் வள்ளுவத்தின் குரலை உணரலாம்; புரிதிறன் சிறக்கும்.

நன்றி: இணையத் தரவுகள்

# வேளாண்மைக் கலைச்சொல் சீராக்க வல்லுநர் குழுக் கூட்டம்






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 2025–2026ஆம் நிதியாண்டிற்கு வேளாண்மைக் கலைச்சொல் அகராதி உருவாக்கத் திட்டமிடப்பட்டு, அதுதொடர்பில் கலைச்சொல் சீராக்க வல்லுநர் குழுவின் முதல் கூட்டம் 25.06.2025ஆம் நாளன்று சென்னை – சேப்பாக்கம், வேளாண்மை இயக்ககக் கூட்டரங்கில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில், வேளாண்மை இயக்ககக் கூடுதல் இயக்குநர் (நடுவணரசுத் திட்டங்கள்) திரு.மெ.சக்திவேல், துணை இயக்குநர் (தகவல் தொழில்நுட்பம் மற்றும் பயிற்சி) திரு.ந.இரவிச்சந்திரன், அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க.பவானி, கலைச்சொல் சீராக்க வல்லுநர் முனைவர் பெரு.மதியழகன், கலைச்சொல் திரட்டுநர் முனைவர் மு.கண்ணன், தோட்டக்கலை மற்றும் மலைப்பயிர்கள் இயக்குநரக உதவி இயக்குநர் திரு. அருண், அகில இந்திய வானொலி நிலைய நிகழ்ச்சிப் பொறுப்பாளர் திரு. சரவணன், சென்னை– கால்நடை மருத்துவக் கல்லூரியின் உழவியல் துறைத் தலைவர் முனைவர் வ.மீ. சங்கரன், வேளாண்மை இயக்ககத்தின் பல்வேறு பிரிவுகளைச் சார்ந்த அலுவலர்கள், பணியாளர்கள், அகரமுதலி இயக்ககத்தினர் உள்பட பலர் கலந்துகொண்டனர்.

## கூட்டத்தில் கலந்தாய்வு செய்யப்பெற்ற கலைச்சொற்களுள் சில:

| | |
|---|---|
| precision agriculture | துல்லிய வேளாண்மை |
| vertical farming | அடுக்குப் பண்ணையம் |
| agrivoltaics | சூரியவொளி மின்னாற்றல் வேளாண்மை |
| regenerative agriculture | மீளாக்க வேளாண்மை |
| precision farming | துல்லியப் பண்ணையம் |
| hydroponic | நீர்ப்பயிரி, நீர்ப்பயிரீடு, நீர்ம வேளாண்மை, மண்ணில்லா வேளாண்மை |
| aquaculture | மீன்வளர்ப்பு, நீருயிரி வளர்ப்பு |
| biofuels | உயிரி எரிபொருள் |
| agroforestry | வேளாண் காடு |
| farm forestry | பண்ணைக்காடு |
| biodegradable packaging | மட்கும் பொதிபொருள் |
| digital agriculture | மின்னணு வேளாண்மை, எண்ம வேளாண்மை |
| smart farming | திறன் பண்ணையம், சீர் பண்ணையம் |
| permaculture | தன்னிறைவு வேளாண்மை, நிலைத்த வேளாண்மை |
| biochar | உயிர்க் கரி |
| climate–smart agriculture | காலநிலை மாற்றத்திற்கேற்ற சீர் வேளாண்மை |
| aerial imaging and mapping | வான்காண் வரைபடம், வான்வழி உரு வரைபடம் |
| crop monitoring | பயிர்க் கண்காணிப்பு |
| pest and disease control | பூச்சி நோய்க் கட்டுப்பாடு, பூச்சி நோய்த் தவிர்ப்பு |
| disaster assessment and recovery | பேரிடர் கணக்கீடும் மீட்பும்,பேரிடர் மதிப்பீடும் மீட்பும் |
| minimum tillage | உழுதலில்லா வேளாண்மை |

# அகப்பயிற்சி மாணவர்களுக்குச் சான்றிதழ் வழங்குதல்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் திருவள்ளுவராண்டு 2056, விடை (வைகாசி) 05 முதல் ஆடவை (ஆனி) 03 வரை (19.05.2025 – 17.06.2025) நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்டு பயன்பெற்ற, சென்னை – ஆவடி, மகாலட்சுமி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவிகளுக்குச் சான்றிதழ் வழங்கப்பெற்றது.





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் திருவள்ளுவராண்டு 2056, விடை (வைகாசி) 05 முதல் 16 வரை (19.05.2025 – 30.05.2025) நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்டு பயன்பெற்ற, சென்னை – திருநின்றவூர், ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் இளங்கலை மற்றும் முதுகலை மாணவிகளுக்குச் சான்றிதழ் வழங்கப்பெற்றது.

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 183-184ஆம் கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 183, 184வது கூட்டங்கள் முறையே 19.06.2025, 24.06.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை,
திரு. அ. மதிவாணன் 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 479 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | | | |
|---|---|---|---|
| acceleration field | வேக வளர்ச்சிப் புலம் | | |
| booster motor | ஊக்கிப்பொறி | space gun | விண்வெளித் துமுக்கி |
| composite propellant | ஈரியல் உந்து பொறி | zodiacal cloud | ஓரை முகில் |
| deorbited | சுற்றுப்பாதை விலக்கல் | space probe | விண் ஊடுருவி |
| elliptical orbit | நீள் வட்டணை | match Fixing | போட்டி மோசடி |
| escape velocity | நிலவிடுபடு விரைவு | volunteerism | தன்னார்வியம் |
| gravitational field | நிறையீர்ப்புப் புலம் | carrom Competition | சுண்டாட்டப் போட்டி |
| homogeneous propellant | ஓரியல் உந்து பொறி | coaching Philosophy | பயிற்சி மெய்ம்மை |
| launch pad | ஏவுமேடை | cricket Ball Throw | மட்டைப்பந்து எறிதல் |
| meteoric particle | விண்கள் துகள் | gymnastics | வளையுடற்பயிற்சி |
| micro rocket | நுண் ஏவுர்தி | physical Strength | உடலுரம் |
| perilune | நிலவணுக்க விண்கலம் | visually Impaired | அகவிழியோர் |
| re-entry vehicle | மீள்நுழைவு விண்கலம் | yoga and Fitness | ஓகமும் உடற்கட்டும் |
| reciprocating pump | ஊடாட்ட எக்கி | | |
| relativistic cosmology | சார்பிய காயகவியல் | | |
| reusable launch vehicle | மீள்பயன் ஏவுகலன் | | |

# சொல்தொகுப்பி – செயல் விளக்கக் கூட்டம்






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 17.06.2025ஆம்நாள் 'கலைச்சொல் தொகுப்பி' செயல்முறை விளக்கக் கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க.பவானி, தமிழ் இணையக் கல்விக் கழக இணை இயக்குநர் (நிருவாகம்) திரு. ரெ.கோமகன், மின்நூலகப் பிரிவு உதவியாளர் ச.மகேஷ், நிரலர் மு.பாலாஜி, கார்க்கி, ஆராய்ச்சி நிறுவனத்திலிருந்து திரு. இளஞ்செழியன், திரு. இராஜபாண்டியன், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், கண்காணிப்பாளர் உள்ளிட்டோர் பங்கேற்றனர். திரு. இராஜபாண்டியன் அவர்கள் 'சொல்தொகுப்பி' குறித்த செயல்விளக்கம் அளித்தார்.

# வெளிவந்து விட்டது!

தமிழ்நாடு அரசு

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## திருந்திய பதிப்பு!

# A Comprehensive Etymological Dictionary of the Thamizh Language

**Revised Edition**



## ஏழு மடலங்கள்

**தமிழ் அகரமுதலி வரலாறு,**

**தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் அடங்கியது**

**பக்கங்கள் 8060** **விலை உருபா 8,027/-**

**கழிவு 35% போக விலை உருவா 5,216/- மட்டுமே**

**குறிப்பு: தொகையைப் பணமாகவோ மின்னணு முறையிலோ**

(through ECS Payment) வழங்கலாம்.

"The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai - 600 028"

IFSC Code: IDIB000K204 Account No: 759144235 (Indian Bank)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
நகர் நிருவாக அலுவலக வளாகம் முதல்தளம், எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, மே.இரா.செ.நகர்,
சென்னை – 600028. தொலைபேசி: 044-29520509
மின்னஞ்சல் முகவரி: dir.dtedp@tn.gov.in வலைத்தளம்: www.sorkuvai.tn.gov.in